# கம்பர் காட்டும்

# பெண்ணேவியம்

முதல் பாகம் : சீதை.

(Dictionary of Epithets and Names of SRI SITA as found in Kambaramayanam)



மு. சதாசிவம், எம். ஏ.,

தமிழ்ச் செல்வம் : 5.

# கம்பர் காட்டும்
# பெண்ணோவியம்

முதல் பாகம் : சீதை.

(Dictionary of Epithets and Names of SRI SITA as found in Kambaramayanam)



ஆசிரியர் :
மு. சதாசிவம், எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ வாசவி கல்லூரி, ஈரோடு.

அணிந்துரை :
பேராசிரியர் ஓ. கே. நல்லமுத்து, எம். ஏ.,
தமிழ்த்துறைத் தலைவர்,
ஸ்ரீ வாசவி கல்லூரி, ஈரோடு.



விற்பனை உரிமை :-
பாரி நிலையம்,
59, பிராட்வே, சென்னை-1.

முதற்பதிப்பு மார்ச்சு 1970


விலை ரூ. 1-60

KAMBAR KAATTUM PENNOVIUM Part-I.

வெற்றிவேல் பிரஸ், சத்தி ரோடு, ஈரோடு.

# அணிந்துரை.



உயர்திரு ஓ. கே. நல்லமுத்து, எம். ஏ.,
தமிழ்த்துறைத் தலைவர், ஸ்ரீ வாசவி கல்லூரி.



ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோனாகிய கம்பனின் காவியம் நவில்தொறும், நவில்தொறும் நயம் பயப்பது. கற்போர் உள்ளத்தினைப் பிணிக்கும் தகையது. அக்காவியக் கடலில் மூழ்கி மூழ்கி இன்பங்கொள்பவர் பலர். கம்பன் கவிதைகளில் ஈடுபடாதோர் இல்லை யெனவே கூறலாம். கம்பனின் சொல்லோவியங்கள், தம் அருஞ்சக்தியால் எல்லோரையும் தன்பால் ஈர்க்கும் அருங்குணங் கொண்டவை. அவர் தம் கவிதை, கதைப் போக்கிற்கேற்ப, மெல்லச் செல்லும், விரைந்தொல்லை செல்லும், தாவித் தாவிச் செல்லும், முழங்கும், இடிக்கும், மழையெனப் பொழியும். அவர்தம் கவிதையின் இனிமையால், கதைப் போக்கால், சொல்லாற்றலால், நயத்தால், உவமை இன்பத்தால், யாப்பு அமைதியால், நம்முள்ளம் கவரப்பட்டு, நம்மை மறந்து அதில் ஈடுபட்டுக் கவிஞர் இழுத்த வழியிலேயே, இறக்கத்தில் தடுப்பா னின்றி ஓடும் வண்டியினைப்போல நாமும் ஓடுகிறோம்.

நம்மை மறந்து இலக்கிய நயத்திலே ஈடுபட்டு அதன் கண்ணே ஒன்றி விடுகிறோம். அதனில் ஒன்றி விடுகின்ற நாம், அதன் வேகத்தால் அடித்துச் செல்லப்படுகின்ற நாம், கம்பனின் உள்ளத்தினைச் சற்றுத் தெளிவாகச் சிந்திக்க இயலாதவர்களாகி விடுகிறோம்.

கம்பர், இராம காதையில் சீதையினைப் பல இடங்களில் பலவாறு அடைமொழி கொடுத்துப் பாராட்டுகிறார். கதைப் போக்கில், கவிதை இன்பத்தில் ஈடுபட்ட நம்முள்ளம், கம்பர் சீதைக்குக் கொடுத்த அடைமொழியினைக் கருத்தாய்க்கொள்ளாது சென்றுவிடுகிறது. எதிர் நீச்சலிடுவதுபோல் கம்பனின் கவியாற்றலினை எதிர்த்து நின்று பாத்திரங்களுக்கு அவர் என்ன அடைமொழி கொடுத்து எவ்வாறு அழைக்கிறார் எனக் காண்போமாயின் நம்முள்ளம் அவர்தம் பேராற்றலைக் கண்டு வியக்கிறது.

கற்பின் செல்வியாம் சீதையினைக் கம்பன், அறிமுகப்படுத்தும்போது அவள்பாற்கொண்ட பெரும் அன்பினையும் பக்தியினையும் நயம்படப் புலப்படுத்துகிறார். கவிஞர்கள் மகளிரின் சாயலுக்கு மயிலைச் சொல்லுவார்கள். மயில் கட்கு இனியது செவிக்கு இன்னாதது. எனவே மயில் எனச் சீதையைச் சொல்லிவிட்டால், குரல் இனிமையிலையே எனக் கருதக் கூடும் என எண்ணிய கம்பர் "அம்சொல் மயில்" எனப் பாராட்டுகிறார். அம்மட்டோ! சீதையின் குரல் இனிமையை,

''குயிலும் கரும்புஞ் செழுந்தேனும் குழலும் யாழும், கொழும் பாகும், அயிரும், அமுதுஞ் சுவைதீர்ந்த மொழி''யினை உடைவள் எனக் குறிப்பிடுகின்ருர். அவர் கிளி மொழிச் சீதைக்குக் கொடுக்கும் அடைமொழிகளைக் கண்டு வியந்து நிற்கிருேம்.

கதுப்பை, கண்ணை, கனி வாயினை, தளிர் மேனி யினைப் புகழ்வது புலவர்க்கு இயல்பே. இருப்பினும் கம்பன் எல்லோரையும் விஞ்சிப் பல இடங்களில் புதுமை யாகப் பாராட்டுகிருன்.

சீதை யார் தெரியுமா ? 'அஞ்சொல் இளவஞ்சி' மட்டுமல்ல; 'அழகினுக்கு அழகு செய்தவள்' மட்டுமல்ல; அன்ன நடையாள் மட்டுமல்ல. பின்யார்? ஈண்டுக் கம்பர் தாம் இராமனிடம் கொண்ட பக்தியெல்லாம் திரட்டிப் பிராட்டிமேல் ஏற்றுகிருர். நாம் அதனைக் கற்கும்போது, சற்று நின்று அச்சொல் தரும் பெரும் விளக்கத்தினை உணர்கிற போழ்து மெய் சிலிர்க்கிருேம். பெண்ணுக்குப் பெருமை அழகால் அல்ல; கணவனுல் என்பதை அழ குறப் புலப்படுத்துகிருர்.

1. 'இராமன் தேவி' 2. 'இராமன் பத்தினி'
3. 'இராமன் மனையாள்' 4. 'உத்தமனர் தேவி'

எனக் கம்பர் கூறும்போது அவர் தம் உள்ளம் நமக்குத் தெற்றெனப் புலப்படுகிறது.

சென்ற ஆண்டு கம்பர் தரும் இராமன் அருட் செல்வத்தினை ஈண்டுத் தந்த கெழுதகை நண்பர் திரு. மு. சதாசிவம், M. A. அவர்கள் இவ்வாண்டு நமக்குக் கம்பர் காட்டும் பெண்ணோவியத்தினை அளிக்கிறார். அவ் அருட்செல்வர் தம் நுண்மாண் நுழை புலத்தாலும் இடைவிடாத முயற்சியாலும் 'கம்பர் காட்டும் பெண்ணோவியத்தில்' சீதையைப் பற்றிக் கம்பர் எங்கெங்கு எவ்வெவ்வாறு அடை மொழி கொடுத்துப் போற்றுகிறார் என ஆழ்கடலில் முத்தெடுத்துத் தொகுத்து மாலையாக நல்குகிறார். அவர் தம் முயற்சி தமிழகத்திலேயே புதுமுயற்சி, புதுப்பாணி எனலாம். கதையோட்டத்தில் கற்பனை நயத்திலே மிதந்து சென்றோரைப் பற்றி இழுத்துக் 'காணுங்கள்! சீதையை எப்படியெல்லாம் கம்பர் அன்பொழுக அழைக்கிறார்' எனக் காட்டுகிறார். இந்நூல் கற்கக் கற்கச் சுவை பயந்து நிற்கிறது. சீதையைப் பற்றிக் குறிப்பிடும் சொற்கள் யாவும் கற்கண்டு - கன்னல் துண்டுகள் எனலாம்.

தனக்கெனத் தனிப் பாதையினை அமைத்துக் கொண்டு இலக்கிய உலகிற்கு நற்றொண்டு ஆற்றி வரும் நண்பர் திரு. மு. சதாசிவம், M. A. அவர்கள் மேன் மேலும் நல்ல ஏடுகளை யாத்துத் தமிழ்த் தாய்க்குச் சமர்ப்பிக்க வேண்டுகிறேன். தமிழ் கூறு நல்லுலகமும் அவர்தம் முயற்சியினையும் ஆர்வத்தினையும், தொண்டினையும் பாராட்டி ஊக்குவிக்க வேண்டும் என எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவல்.

# முன்னுரை

உலகப் பேரழகி ஒருத்தியை ஆண்டுதோறும் தேர்ந்தெடுத்து வருகின்றனர் மேனாட்டினர். ஆனால் மூவுலகத்திற்கும் ஒரு பேரழகியாகக் கம்பர் சீதையைத் தேர்ந்தெடுத்து எத்துணையோ நூற்றாண்டுகள் ஆகிவிட்டன. உலக இலக்கிய உலகில் சீதையின் அழகை விஞ்சுமாறு வேறொருத்தி இதுவரை பிறக்கவில்லை. அத்தகைய அழியாப் பேரழகு படைத்த சீதையை, அழகுத் தெய்வமான திருமகளின் அவதாரத்தைக் கம்பர் எவ்வாறெல்லாம் சொல்லோவியமாக்கித் தீட்டியிருக்கின்றார் என்பதைக் காட்டுவதற்காகவே இந்நூல் தொகுக்கப் பெற்றது. 'அமிழ்தின் வந்த அமிழ்து' 'தவஞ்செய்த தவமாந் தையல்,' 'நினைந்த போதிலும் அமுது ஒக்கும் நேரிழை' போன்ற அளவில்லாத அழகு மணித் தொடர்கள் சீதை தோன்றியதால் தமிழன்னைக்குக் கிடைத்த அருஞ்சொல்லணிகள். அழகினுக்கு அழகு செய்தாளைக் குறிக்கும் எல்லாத் தொடர்களும் அழகுத் தொடர்களாக அமைந்திருப்பதில் வியப்பில்லை. அழகு என்னும் அமுதினைப் பருக விரும்புவார்க்கு இந்நூல் தெவிட்டாத விருந்தாயிருக்கும் என்று நம்புகிறேன்.

கம்பர் பிறமகளிரை வருணித்துக் கூறியுள்ள தொடர்களும் சொல்லோவியங்களும் இரண்டாம் பகுதியாக வெளிவரும். அந்நூல் வெளிவரும்

போது சீதையைக் குறிப்பதற்காகக் கம்பர் எவ்வளவு ஆசையுடன் அழகு நிறைந்த சொற்களையும் தொடர்களையும் தேர்ந்தெடுத்துச் சீதைக்கு அழகுச் சொல்மாலை சூட்டியிருக்கிருர் என்பதை ஒப்பிட்டு உணரமுடியும்.

இராமனும் சீதையும் கைப்பிடித்துக் கடிமணம் புரிந்த மங்கலத் திருநாளாம் பங்குனி உத்தரத்தில் சென்ற ஆண்டு 'இராமன் அருட் செல்வம்' கம்பர் தம் பாத மலர்களில் சமர்ப்பித்து வெளியிடப் பெற்றது. இவ்வாண்டும் அதே திருநாளில் சீதையின் வருணனைத் தொடர்களைக் கொண்ட இந்நூல் கம்பரது திரு முன்னர் அரங்கேற்றம் பெறுகிறது. இத்தகைய நூல்கள் வெளி வருவதற்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வரும் அண்ணல் திரு சா. கணேசனுர் கம்பரின் புகழ் வடிவமாகத் திகழ்பவர் என்பதைத் தமிழுலகம் நன்கறியும் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்கிறேன்,

இந்நூலை ஆர்வத்துடன் படித்து மகிழ்ந்து அழகு மிக்கதோர் அணிந்துரையை வரைந்தளித்து வாழ்த்திய என் அருமை நண்பர் பேராசிரியர் திரு. நல்லமுத்து அவர்களுக்கு என் அகமர்ந்த நன்றிகள் உரித்தாகும்.

ஒருவார காலத்திற்குள் இந்நூலை அச்சிடவேண்டும் என்ற என் எண்ணத்தை விரைந்து வெற்றிபெறச் செய்த வெற்றிவேல் அச்சகத்தினர்க்கும் என் நன்றி.

அகராதித் துறையில் அயர்வின்றி உழைப்பதற்கேற்ற உயிர்ப்பினை நல்கிவரும் தேவியின் திருவடி மலரை வணங்கி இச்சொல மாலையைக் கம்பர் தம் மலர்ப்பாதங்களில் காணிக்கையாக்குகின்றேன்.

ஈரோடு, 18-3-'70 மு. சதாசிவம்.

# கம்பர் காட்டும் பெண்ணோவியம்

## சீதை

அகில் புனை குழல் மாது (2-708)
அங்கம் யாவர்க்கும் எழு தொணுதாள் (3-625)
அங்கனையாள்-பெண்களிற் சிறந்தவள் (1-624)
அசைவில் கற்பின் அணங்கு (6-110)
அஞ்சம்பையும் ஐயன்றனது அலகம்பையும் அளவா
நஞ்சங்களை வெலவாகிய நயனங்களை உடையாள்
(2-624 ; அலகம்பையும் - கூரிய அம்பையும்)
அஞ்சொல் இளவஞ்சி (5-616 ; 6 - 698)
அஞ்சொல் மயில் (3 - 994)
அஞ்சொல்லாள் (6 - 2823)
அஞ்சொற்கள் அமுதின் அள்ளிக் கொண்டவள்
(3-623)
அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லாம் அருளுவாள்
(1-1212)
அஞ்சொற் கிளியன்ன அணங்கு (3-1094)
அண்டர்முதல்வன் ஒரு ஆவி அனையாள் (6-687)
அணங்கரசி (1-1231)
அணங்கன்னுள்(3-876; 5-1279)
அணங்கினுக்கு அணங்கன்னுள்-அழகுக்கு ஓர் அழகு
போன்றவள் (3-876)

அமுதுயிர்க்கும் வீழிக் கொழுங்கனிச் செவ்வி வாயாள் (4-30)

அயில் ஏய் விழியார் (4-485)

அயில் கொள் கண்ணினுள் (1-598)

அயில்விழி யன்னே (5-368)

அயிற்கண் மலர் நங்கை (1-1229)

அரவிந்தந் துறந்தாள் (4-761)

அரியவள் - தன்னே ஒப்பாரில்லாதவள் (1-617)

அரிவை (3-214 ; 869 ; 5 - 1293)

அருங்கலன் - கற்பின் அருங்கலம் (1-1231)

அருங்குலக் கற்பினுக்கு அணி (6-3941)

அருந்ததி - அருந்ததி போன்றவள் (3-994 ; 5-410 ; 612)

அருந்ததி அனேய கற்பின் காதலாள் (3-1016)

அருந்ததி அனேய நங்கை (6 - 775 ; 3947)

அருந்ததி எனத் தகைய சீதை (4-843)

அருந்ததிக் கற்பின் தேவி (5-468)

அருந்ததிக் கற்பினுள் (6-2867)

அருந்ததி யனேய கற்பின் நங்கை (1-1214)

அருந்ததி யனேயாள் (2-704)

அருந்ததியும் வந்தனே செய் அம்சொல் இள வஞ்சி (6-698)

அருப்பேந்திய கலசத் துணே அமுதேந்திய மதமா மருப்பேந்திய தெனலாம் முலே, மழையேந்திய குழலாள் (2-627)

அல்லி ஊன்றிடும் என்று அஞ்சி அரவிந்தம் துறந் தாள் ( அல்லி ஊன்றிடும் என்று-அகவிதழ்கள் பதிந்து தைக்கும் என்று) (4-761)

இளிக்கு அறை இன்சொல்(லாள்)-இளி என்னும் இசைக்கு ஒப்புமையாகச் சொல்லத்தக்க சொல் லாள் [3-1066]

இளைத்த நுண்மருங்குல் நங்கை [6-1593]

இறைவன் தேவி [6-350]

இறைவி [4-475;6-105;380;404;3931;3933]

இன்சொலாள் [3-1155]

இன்னகை-இனிய பற்களையுடையவள் [6-2337]

இன்னகைச் சனகி [4-446]

இன்னமுது அன்னவள் [க 2-52]

உத்தமன் தேவி [3-895]

உத்தமனுர் தேவி [6-3884]

உம்பர் நாயகி - தேவர்கட்குந் தலைவி [6-4183]

உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக்கரம் வைக்குங் கமையாள் [1-581]

உலகின் தம்மனை ஆனவள் [6-86]

உலகுக் கெல்லாந் தாயவள் [6-762]

உலகுடை நாயகன் தன் துணைப் பெருந்தேவி [5-633]

உவரிவாயன்றிப் பாற்கடல் உதவிய அமுது [2-749]

உழைத்தடங்கண்ணி - மானின்கண்போன்ற பெரிய கண்களையுடையாள் [4-920]

ஊழியான் பெருந்தேவி [5-324]

எங்கள் நாயகற்கு உயிரினுமினியாள் [5-291 ; அனுமன் கூற்று)

எண்ணரும் நலத்தினள் - நினைத்தற்குமரிய அழகுங் குணமுமாகிய நலங்களையுடையவள் [1-590]
எழுதரும் எழிலாள் [2-706]
எழுது குங்குமத் திரு [6-2746]
எழுது பாவை [5-690]
எழுது பாவையன்னாள் [2-514]
எழுது பாவையனையாள் [3-41]
ஏகநாயகன் தேவி [5-1087]
ஏந்திழை [1-1054;2-783;3-1045;4-727;5-529;578; 1280;6-923;946;2862;3909;4017]
ஏந்திழையாள் [6-923]
ஏந்திள முலையாள் [2-706]
ஏழுபடியும் தலைமேற் கொண்ட கற்பினள் [6-6] [படி - உலகு]
ஏழை [2-525;3-779;804;866;1023;1138;6-2630; 3909]
ஏழை மான் [4-810]
ஏழையர் [1-310;829;946;982]
ஏழையாள் [6-917]
ஐயநுண் மருங்குல் நங்கை [3-786]
ஒரு மகள் - ஒப்பற்றவள் [3-952]
ஒருவில் பெண்மையென்று உரைக்கின்ற உடலினுக் குயிர் [2-760]
ஒளிவளைத் தோளி [6-3914]
ஒன்றும் மருங்கிலாதவள் [3-359]
ஓங்கிய அழகினள் [3-833]
ஓடைவாள் நுதலினள் [4-491 ; ஓடை - பட்டம்]

ஓவியப் பாவை போன்றனள் (1-594)
ஓவியம் ஒக்கின்ருள் (6-2863)
கடலமுதின் தெளி அன்னதொர் மொழியாள் (2-623)
கணங்குழை (1-1232)
கணங்குழை அணங்கு (3-963)
கணங்குழைச் சீதை (6-2379)
கணங்குழையாள் (1-759)
கந்தக் கடிநறுங் கமலத்தவள் (4-18)
கமலக் கண்ணனுர் உள்ளுறை உயிர் (5-394)
கமலச் செல்வி (5-395)
க்மையாள் – பொறுமையை மேற்கொண்டவள்
(3-1105)
கமையினுள் (5-339)
கருகும் வார்குழல் சனகி (6-4073;கருகும்-கறுத்த)
கருங்கண் சீதை (3-721)
கருங்கண் செவ்வாய் நொவ்விடை மயில் அன்னுள்
(6-4059)
கருங்குழல் சனகன் மாமகள் (3-1128)
கருங்குழல் சேயரிக் கண்ணி (3-1126)
கருங்குழலி (5-1261)
கருந்தடங் கண்ணி (6-4198)
கருந்தடங் கண்ணினுள் (4-417)
கரும்பு அழி சொல்லி (4-217)
கரும்பு உண்ட சொல் - கரும்பு போன்று இனிய
சொற்களை யுடையவள் (3-908)

கனத்தினுல் கடைந்த பூண் முலேய கைவளே (6-3976)

கனிந்த காமர்ப் பண்ணுறு கிளவிச் செவ்வாய்ப் படையுறு நோக்கினுள் (4-892)

கனிவாய்ச் சீதை (2-61;2-173)

காகுத்தன் மனேவி (3-845)

காண்டற்கு இனியாள் (3-699)

காதொடுங் குழைபொரு கடைக் கண் நங்கை (1-601)

காந்தள் மெல்விரல் சனகி (5-305;1093)

காந்தையருக்கு அணியனேய சானகியார் (6-3880)

காம்பு அனேய தோளி (4-836)

காம்பு உறழுந் தோளாள் (3-357)

காமரம் பழுத்த பாடல், கள் எனக் கனிந்த செஞ் சொல், தேமலர் செறிந்த கூந்தல், தேவர்க்கும் அணங்காம் என்னத் தாமரை இருந்த நங்கை சேடியாந் தரமுமல்லள் (3-622)

காமரு திரு (3-1033)

காரிகை (1-1146;1251;3-972;6-1615)

காரிகையாள் (3-368)

காவியங் கண்ணி (5-308)

காவியான கண்ணி (3-645)

காவியோ கயலோ எனுங் கண்ணிணேத் தேவி (3-306)

கான் இயல் மயில் அன்னுள் (3-792)

கிள்ளே – கிளிபோன்றவள் (5-440)

கிளர் பொற் சீதை – ஒளி விடும் உயர்ந்த பொன் போன்ற சீதை (6-1284)

கிளிப்படா மொழியவள் – கிளியினிடம் உண்டாகாத இனிய சொற்களையுடையவள் (4-10)

கிளி மிழற்றும் மென் சொல் (லாள்) (3-1059)

கிளிமொழிச் சீதை (6-527)

கிளியன்னாள் (3-1003;6-872;2783)

குதலைச் சொல்லாள் (5-475)

குமிழ் முலைச் சீதை (2-254)

குயில் (1-1224;1238;1332;1340;2-713;747;3-961; 5–430;6–10)

குயில் அன்னாள் (6-2613)

குயில் ஏர் மொழியார் (4-485)

குயில் மழலையாள் (5-333)

குயிலுங் கரும்புஞ் செழுந் தேனும் குழலும் யாழுங் கொழும் பாகும் அயிரும் அமுதுஞ் சுவை தீர்ந்த மொழி (யாள்) (3-1058)

குரவம், குவி கோங்கு அலர் கொம்பு - குரா மலரும், குவிந்த கோங்கரும்புகளும் மலர்ந்த ஒரு பூங் கொம்பு போன்றவள் (3-74)

குராவருங் குழலி – குராமலரின் அரிய மணங் கமழும் கூந்தலையுடையவள் (5-680)

குருதிவாள் எனச் செவ்வரி பரந்த கண் குயில் (2-747)

குரு நிறத்து ஒரு தனிக் கொண்டலாமெனத் திரு வுறப் பொலியும் ஓர் செல்வன் தேவி (5-392)

குலக் கொடிச் சீதையாம் மங்கை [1–1191]

குலச் சனகி [3-668]

குலச் சீதை [3-39]

குலத்தின் வந்த பிழைப்பிலாதாள் [6–2821]

குலத்துளாள் — சிறந்த குலத்துள் தோன்றியவள் [6–3175]

குவளை உண்கண்ணி [4–768]

குவளை நோக்கி [6-330]

குவியிள வனமுலைக் கொம்பு [2-755]

குழுவு நுண்தொளை வேயினுங் குறிநரம்பு எறிவுற்று எழுவு தண்டமிழ் யாழினும் இனிய சொற்கிளி [2–774; குழுவு நுண் தொளை வேய் – கூட்டமாகிய நுண்ணிய தொளையுடைய புல்லாங்குழல்]

குழை சென்று இறங்கி மறந்தரு செங்கண்ணாள் – குழை எனும் காதணிவரை சென்று இறங்கிப் பாய்ந்து கொடுமை செய்யும் செவ்வரி பரந்த கண்ணாள் [5-432]

குழைந்த நுண்ணிடைக் குவி இள வனமுலைக் கொம்பு [2-755]

குழை பொரு கண்ணினாள் [4-195]

குழையுறு மதியம் பூத்த கொம்பன்னாள் [3-426]

குறுநகைச் சனகன் மான் [4–515]

கெண்டைத் தடங் கண்ணாள் [6–1653]

கேடு அறு கற்பினாள் – கேடு இல்லாத கற்பினை உடையவள் [5-1005]

2 85

கோள்புரை இருள் வாசக் குழலாள் — கரும்பாம்பு போன்ற கருநிறமான வாசமுடைய கூந்தலை உடையாள் [2–714]

சங்கவளைக் குயில் [1-1332]

சங்கிற் பொலிந்த தகையாள் – சங்கம் போன்று தூய்மை சான்று விளங்கும் பெருந்தன்மை யுடையவள் [6–2]

சட்டகந்தன்னை நோக்கி யாரையுஞ் சமைக்கத் தக்காள் - தனது உருவெழிலைக் கண்டு எத்துணை எழில்வாய்ந்த மகளிரையும் பிரமன் மேல்வரிச் சட்டமாகக் கொண்டு படைக்கக்கூடிய பேரழகுடையவள் [4·757]

சந்தவார் குழலினள் [3-1023]

சந்தவார் கொங்கையாள் - அழகிய கச்சணிந்த கொங்கையாள் [4–39]

சந்திர வதனத்து அருந்ததி [5–410]

சந்திரற்கு உவமை சான்ற வதனத்தாள் [3-794]

சனகன் காதல் பெண் [4-972]

சனகன் குயில் [1–1340]

சனகன் பாவை [5-1173]

சனகன் பூவை [2-1167]

சனகன் பெற்ற அன்னம் [4-307]

சனகன் பொன் [3-5]

சனகன் மடந்தை [5-438]

சனகன் மாமகள் [3–1128]

சிவந்த வாய்ச் சீதை (2–154)

சிற்றிடைச் சீதை (3-632;637)

சிற்றிடை மடந்தை (1-1233;2-167;244)

சிறுகிடை வருந்தக் கொங்கை ஏந்திய செல்வம் என்னும் நெறி இருங் கூந்தல் நங்கை (2-587)

சிறையின் எய்திய செல்வி (5-248)

சீதா (5–573)

சீதை (1-559;765;774;1163;1170;1288;2-61;154;173; 253;254;402;408;445;643;666;3-39;210;554; 621;628;631;632;637;701;721;746;757;933;1035; 1044;4-31;470;843;846;883;893;5-57;304;393; 639;730;735;1057;1060;1071;1148;1167;6-1220; 1284;1285;1290;1465;1489;1568;1569;1777; 1932;2211;2251;2379;2707;2716;2790;2821; 2848;2850;2852;3056;3059;3172;3173;3215; 3228;3230;3875;3882;4013)

சீதையாம் கொடி (2-972)

சீதையாம் திருமகள் (2-31)

சீதையாம் மங்கை (1-1191)

சீதையாம் மாது (6-4005)

சீதையென்னும் மான் (3-632)

சீதையெனும் தேடரு மாமணி (1-774)

சீலம் இன்னதென்று அருந்ததிக்கு அருளிய திரு (2–762)

சுணங்கு தோய் முலையாள் (6-3907)

சுந்தரப் பவள வாயாள் (6-1618)

சுந்தரி (5-567)
சுமைத்திரள் முலைத் தெரிவை (1-1222)
சுரிகுழல் தோகை (4-904)
சுருங்கிடை(யாள்) (5-585)
சுரும்பு கண்டு ஆலும் கோதை (4-763)
சுழித்த தண்புனல் புரை உந்தியந் தோகை (2-767)
சூது ஆர் முலைத் தோகை (6-4066)

சூழி மால் யானையின் துணை மருப்பு இணையெனக் கேழ் இலா வனமுலைக் கிரி சுமந்து இடைவ தோர் வான்மின் இளங்கொடியின் வந்தாள் (4-786; சூழி மால் யானை - முகப்படாமணிந்த மத யானை)

செங்கைத் தளிர் மான் (1-586)
செந்தாமரை ஒதுங்கும் அன்னம் (3-1059)
செந்தாள் வஞ்சி – சிவந்த பாதங்களையுடைய வஞ்சிக்கொடி போன்றவள் (4-961)
செந்திரு (6-1619)
செம்பொற் கொம்பர் (1-1315)
செம்பொன்னாற் செய்து குலிகம் இட்டு எழுதிய செப்பு ஓர் கொம்பு தாங்கிய தெனப் பொலி வன முலைக் கொடி (2–772)
செம்மா மலராள் நிகர் தேவி (3-79)
செம்மானவள் - செந்நிறமானவள் (3–774)
செய்யவாய் மணித் தோகை (6–3906)
செயிர்ப்பினும் அழகு செய்யும் திருமுகத்து அணங்கு (6-706)

செல்வி (5-248)
செவ்வரி பரந்த கண் குயில் (2-747)
செவ்வாய் நொவ்விடை மயில் அன்னாள் (6-4059)
செவ்வாய் வஞ்சி (3-729)
செறிகுழல் சீதை (5-735)
செறியிருங் கூந்தல் நங்கை (2–587)
சேய் அரிக் கண்ணி (3-1126)
சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்ந்து இவண் மேயினள் (3-835)
சேயிழை (3-858)
சேயொளிக் கமலத்தாள் (6-4255)
சேல் தடங்கண் திரு (2-839)
சேவகன் தேவி (5–1099;1255)
சோனைவார் குழற்சுமை பொருது இறும் இடைத் தோகை (2–764)
ஞால நாயகன் தேவி (5-1251)
தடம்படு கண்ணினாள் (3-1037)
தண்டமிழ் யாழினும் இனிய சொற்கிளி (2–774)
தண் நறுங் கருங்குழல் சனகன் மாமகள் (3-1128)
தயங்கு பூண் முலைச் சானகி (2-513)
தருணமங்கை - இளம் பருவப் பெண் (6-535)
தருமக் கற்பின் தெய்வதம் (6-2838)
தவஞ் செய்த தவமாந் தையல் (5–1275)
தவத்தி (6-62;2838;3175)
தளிரியல் - தளிர்போன்ற சாயலை உடையவள் (4-23;3845)

தளிரைப் போல் அடியினுள் (3-281)

தளையவிழ் குழலாள் (3-838)

தளையவிழ் கோதை (3–1156)

தளையவிழ் கோதை ஓதிச் சானகி (1-1204)

தன்னைப் போல் தகையோர் இல்லாத் தளிரைப் போல் அடியினுள் (3 - 281 ; தகையோர் - ஒப்போர்)

தனு எனும் நுதலி (4-498)

தாக்கணங்கு (4-470)

தாக்கணங்கு அனையவள் (1-591;6-1532)

தாமரைச் செல்வி (2-986)

தாமரை தவிரப் போந்தாள் (3-620)

தாமரை துறந்த தையல் (4–492)

தாய் தெரிந்து உலகு காத்த தவத்தி - தாயாகத் தெரியப்பட்டு உலகினைப் புரக்கின்ற தவமுடையவள் (6-717)

தாழ்விலாத் தவத்து ஓர் தையல் (6-722)

திங்கள் வாள் முகத்தினுள் (3–857;4-783)

திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி (6-1284)

திணிவேய் மென் தோள் மாதர் (4-628)

திரு (1-99;331;723;760;1182;2–260;762;778;794;893; 3-1033;4–339;811;5–327;582;1241;6-2746;2819; 2821;2838;4074;4160;4168;4175;4176;4177; 4184;4276;4282;4298;4307)

திருந்திழை (4-216;681)

திருமகள் [1–463;2-50;162;3-663;4-224;5–425; 6-3865]

திருமகள் அனைய தெய்வக் கற்பினள் [4-205]

திருமங்கையிற் செவ்வியாள் [3–306]

திருவின் கழுத்துத் திரு அன்னாள் [5–601; திரு - திருமாங்கல்யம்]

திருவேயனையாள் [1-1250]

திலகம் - பெண்களில் திலகம் போன்றவள் [5–433]

தீங்கிலாக் கற்பின் திருமடந்தை சேடியாம் பாங்கினாள் [6–1654]

தீபம் அன்ன பேரெழிலாட்டி [3-1034]

தீயில் தூயவள் - நெருப்புப் போலத் தூய்மை பெற்றவள் [5-1135]

தீயைச் சுட்டதோர் கற்பெனுந் தீயினள் [5–1078]

துடிபுரையிடை(யாள்) [2-713]

துடியிடை [5-527]

துடியின் நேர் இடை [3-1052]

துப்பு அழி செவ்வாய் வஞ்சி [3–729]

துப்புறச் சிவந்த வாய்த் தோகை [6-4167]

துப்புறச் செய்யவாய் மணித் தோகை [6-3906]

துப்புறழ் துவர் வாயின் தூய்மொழியவள் [2-723]

துவர்த்த வாயாள் [3–117]

துன்ற லோதி - அடர்ந்து இருள் போன்ற கரிய கூந்தலை யுடையவள் [4-918;5-331]

துன்று இருங் கருங்கடல் துவைப்பத் தோன்றிய மன்றலங் கோதையாள் [1-1316]

நச்சு இலை அயிற்கண் மலர் நங்கை (1-1229)
நஞ்சங்களை வெல ஆகிய நயனங்களை உடையாள் (2-624)
நஞ்சினோடு அமுதங் கூட்டி நாட்டங்களான என்னச் செஞ்செவே நீண்டு மீண்டு சேயரி சிதறித் தீய வஞ்சமுங் களவுமின்றி மழையென மதர்த்த கண்(ணாள்) (1-1208)
நந்தல் இல் விளக்கம் அன்ன நங்கை (1-1216)
நரந்த நறைக் குழல் நங்கை (1-770)
நரம்பையும் அமிழ்தம் நாறும் நறவையும் நளிர் நீர்ப் பணிலக் கரும்பையுங் கடந்த சொல்லாள் (4-755)
நல் மான் அனையாள் (3-767)
நல்லாள் - உத்தமி (3-339;5-486;6-2636)
நல்லோள் (5-648)
நல்வாய் நல்லாள் - நல்ல அறமொழிகளைக் கூறிய நல்லாள் (5-486)
நலம் பொறை கூர்தரு மயில் - அழகின் பாரத்தை மிகுதியாய்ப் பெற்றுள்ள மயில் போன்ற சாயலாள் (3-1101)
நவ்வியின் விழியவள் (3-108)
நவையிலாள் - குற்றம் தீர்ந்தவள் (6-3949)
நளினத்தாள் (4-925)
நளினம் நாணும் முகத்தினள் (4-775)
நற்பெருந்தவத்தளாய நங்கை (5-1273)
நற்றோடிச் சீதை (5-304)

நறத்து உறை முதிர்ச்சியுறு நல்லமுது பில்குற்று அறத்தின் விளைவு ஒத்து முகடு உந்தி அரு குய்க்கும் நிறத்துவரிதழ்க் குயில் (1-1224)

நன்னலத்துப் பெண்ணரசி (1-758)

நன்னுதல் (-1–1002;2-693; 3-906;5-315;737; 1124; 6–404; 3616; 4172)

நன்னுதல் சீதை (6-871)

நன்னுதல் தேவி (4–938)

நன்னுதலி (5-553)

நன்னெடுங் கூந்தல் (2–1160)

நாண் உடை நங்கை – நாணமே அணிகலமாக உடையவள் (1-769)

நாயகன் தேவி (5-468)

நாரி (3-1064)

நாவி ந்ாறு ஓதி (3-642; நாவி – கத்தூரி)

நாள் மலர்ப் பெண் - அன்று மலர்ந்தது போன்ற புதுமையுடன் விளங்கும் தாமரையில் வீற்றிருக் கும் திருமகள் போன்றவள் (4-877)

நானம், நாள்மலர், நறையகில், நாவி, தேன் நாறும் சோனை வார்குழற் சுமை பெருது இறும் இடைத் தோகை (2-764 ; நானம் – புழுகு)

நிரைவளை முன்கை நங்கை (3-836)

நிலம் பொறையிலது என நிமிர்ந்த கற்பினள் – பூமி பொறுமையில்லாதது என்று கூறும்படி அப்பூமி யினும் மேம்பட்ட கற்பினள் (3-1131)

நிழல் இரு குண்டலம் அதனின் எய்திடா அழலிடா மிளிர்ந்திடும் அயில் கொள் கண்ணினுள் – ஒளி விடுகின்ற, குண்டலத்தினிடத்தே சென்று காதுவரை நீண்டு நெருப்பிலிட்டுக் காய்ச்சாமலே ஒளி வீசும் வேல் போன்ற கண்ணுள் (1-598)

நிறத்துவர் இதழ்க் குயில் (1-1224)

நிறைதவமன்னதொர் பொறையாள் (2–623)

நினைந்த போதிலும் அமுது ஒக்கும் நேரிழை (2-770)

நீண்டவிழி நேரிழை (5-557)

நீண்டு மிளிர்தருங் கருங்கண் செவ்வாய் நொவ் விடை மயிலன்னுள் (6–4059)

நீலம் செருக்கிய தெய்வ வாட்கண் மங்கை (4-767)

நுண்ணிடைப் பொற்றொடி (3-945)

நுண்ணிடையினுள் (3-629)

நுண் மருங்குல் தாக்கணங்கு (4-470)

நுண் மருங்குல் நங்கை (3-786)

நூல் உறு மருங்குலாள் (1–596)

நூல் ஒக்கும் மருங்குலாள் (4–765)

நெய் உறு விளக்கன்னுள் (5-513)

நெய் கொள் நீருண்டு நெருப்புண்டு நீண்டு, மை நிறைந்த பைகொள் வேல் எனக் காலனும் மறுகுறுங் கண்ணுள் (2-753)

நெற்றிப் பிறையாள் (3-772)

நெறிந்த குழல் – சுருண்ட கூந்தலையுடையவள் (5-610)

நெறிந்தார் ஓதிப் பேதை (5-488)

நேரிழை (1–1029;1061;2-770;3-223;255;347;5-557 559;6–3158)

நைவளம் நவிற்றும் மொழி-நைவளம் என்னும் பண் போல இனிமையாகப் பேசும் சொற்களை உடையவள் (1-1227)

நொவ்விடைக் குயில் (5–430; நொவ்விடை - நுட்ப இடை)

நொவ்விடை மடந்தை (5-383)

நொவ்விடை மயிலன்னாள்(6-4059)

நோக்கு உறுங்காரிகையாள் — அழகு அமைந்த பெண் (3-368)

படம் பரந்து அனைய அல்குல், பால் பரந்தனைய தீஞ்சொல் தடம்படு கண்ணினாள் (3-1037)

படர் கற்பினாள்-செழித்த கற்பினையுடையவள்(3-924)

படை அமை விழியாள் – வேற்படை போன்ற விழி களை யுடையாள் (6-4054)

படையுறு நோக்கினாள் (4-892)

பண்டு அமுதில் தோன்றினாள் (6–92)

பஞ்சன்ன மெல்லடி மயில்

பஞ்சி மெல்லடிப் பாவை (2-641)

பஞ்சு எனச் சிவக்கும் மென்கால் தேவி (6-429)

பஞ்சு பூத்த விரல் பதுமம் பவழம் பூத்த அடியாள் (4-32)

பண் எனுங் கிளவி [யாள்](2-1161)

பண்களால் கிளவி செய்து பவளத்தால் அதரமாக்கிப்
பெண்களானார்க்குள் நல்ல உறுப்பெலாம்
பெருக்கி யீட்டி எண்களால் அளவா மானக்
குணந் தொகுத்து இயற்றினாள் (6-1571)

பண்ணுறு கிளவிச் செவ்வாய்ப் படையுறு நோக்கினாள் (4-892)

பண்நிறை பவளச் செவ்வாய்ப் பைந்தொடிச் சீதை (6-1220)

பணி பழுத்து அமைந்த பூண்நலம் (6-469)

பத்தினி (3-898;6-606;2821;2861;3228;3967)

பதுமப் பவழம் பூத்த அடியாள் (4-32)

பதுமப் போதினாள் (6-3971)

பயில் பாடக மெல்லடி பஞ்சு அனையார் [4-488]

பரந்த பேரல்குல் [2-781]

பல் இயல் நெறியிற் பார்க்கும் பரம் பொருள் என்ன
யார்க்கும் இல்லை உண்டு என்ன நின்ற இடை
(யாள்) [1·1205]

பவர்ந்த வாள் நுதலினாள் [4-769; பவர்ந்த - நன்கமைந்த]

பவழக் கொடி யன்னவள் [5-573]

பவழக் கொம்பு [3-831]

பவழத்தின் வல்லி [3-285]

பவளச் செவ்வாய் அம் நெடுங் கருங்கண்(ணாள்)
[6-707]

பவளச் செவ்வாய்ப் பைந்தொடிச் சீதை [6-1220]

பவள வாயாள் [4-769]

பெண்ணினுக்கு அருங்கலம் அனைய பெய்வளை (4-451)

பெண்பால் (5-1579)

பெண்பாலாள் (3–987)

பெண் பிறந்தவர் அருந்ததியே முதல் பெருமைப் பண்பு இறந்தவர்க்கு அருங்கலமாகிய பாவை (6-4016;இறந்தவர்க்கு – மிக்கவர்க்கு)

பெண்மைக்காப்பு-பெண்ணின் நான்குவகைப் பண்பு கட்குப் பாதுகாவலாக உள்ளவள் (6-3952)

பெண்மைக்கு அரசி (6-4064;4065)

பெண்மைக்கு எல்லாங் காணி - பெண்களின் இலக் கணங்களுக்கெல்லாம் விளை நிலமானவள் (6-3935)

பெண்மை நீங்காத கற்புடைய பேதை (5-141)

பெய்வளை - அணியப்பட்ட வளையல்களையுடையவள் (4-451;6-1300;6-4006)

பெய்வளை அன்னம் அன்ன அணங்கு (3-213)

பெருஞ்சிறைக் கற்பினள் - பெரிய தற்காப்பாகிய கற்பிற் சிறந்தவள் (6–2820)

பெருந்தடங் கண்ணவள் (3-842)

பெருந்தேவி (5-324)

பெருந்தேன் இன்சொற் பெண் (1-583)

பெரும் புகழ்ச் சனகி (2–42)

பெறலருந் தெரிவை (4–802)

பேதை (1-1195;1206;5-141;488;6-282)

பேதைப் பெண் (6-2852)

பேருலகின் மாதா அனையாள் (3-899)

பேரெழிலாட்டி (3-1034)

பைந்தொடி (1-701;594;4-533;5-477;1242;6-4055)

பைந்தொடிச் சீதை (6-1220)

பைந்தொடித் திரு (4-339)

பையரவல்குலாள் (1-1207)

பொது இயற்கை தீர் கற்புடைப் பத்தினி – பிறர் எவர்க்கும் இல்லாது தனக்கே சிறப்பாக அமைந்த கற்புடைய பத்தினி (6-3228)

பொம் என்ன வண்டு அலம்பும் புரிகுழல் (1-763)

பொய்யாம் என ஓது புறஞ் சொல்லினுல் நையா இடை[யாள்] - பார்க்கும் அயலார் உண்டென்பது பொய்யேதான் என்று கூறும் சொல்லுக்கு இணங்கத் தளரும் இடையாள் (3-769)

பொய்யோ எனும் இடையாள் (2-622)

பொருளும் யாழும் விளரியும் பூவையும் மருள நாளும் மழலை வழங்குவாள் (5-436 ; பொருள் - குதலைச் சொல்லுடைய குழந்தைகள்)

பொலங்குழை - அழகிய குண்டலங்கள் அணிந்தவள் (3-886)

பொலங்குழைப் பூண்முலைச் சீதை (1-1163)

பொலங் குழை மயில் (1-600;6-4204)

பொலங் குழையாள் (3-1099;1100)

பொலங் கெழு சீதை (6-907; பொலம் - அழகு)

பொலங்கொடி (3-775;5-609)

பொலந்துடி மருங்குலாள் (5-361)

பொலன்கொள் பூவை (6-1299)

பொற்கொம்பு (4-766)

பொற்கொழுந்து - பொன்னின் சுடர் போன்றவள் (5-434)

பொற் சூடகம், வால் வளைச் சீதை (1-774)

பொற்பாவை (1-607)

பொற்பின் ஆணி – அழகு என்னும் பொன்னுக்கு (மாற்றறிய) உரையாணிப் பொன் போல் உள்ளவள் (6-3935)

பொற்பினுக்கு அணி-அழகுக்கு அணிகலம் போன்றவள் (3-832)

பொற்பினுக்கு அழகு (6-3952)

பொற்ருெடி (1-1328; 2-673; 3-945)

பொற்ருெடி மடந்தை (1-785)

பொற்ரூடு இவர்கின்ற பொலங் குழையாள் (இவர்கின்ற - விளங்குகின்ற(3-1100)

பொறையினுல் உலகம் போற்றும் வேய் எனத் தகைய தோளி (6-1240)

பொன் (1-699; 2-534; 3-5; 175; 288: 763; 6-1580; 3930; 4025; 4319)

பொன் அன்னுள் (3-793)

பொன் தழைத்தனைய அல்குல் சீதை (6-3173)

பொன் தாழ் குழையாள் (6-2611)

பொன் திணிந்த கொங்கை மங்கை (1-796 ; பொன்-பொன்னிறத் தேமல்)

பொன்திணி பொலங்கொடி - பொன்னைத் திணித்து அமைக்கப் பெற்ற அழகிய கொடி போன்றவள் (5-609)

பொன் துஞ்சு பொலங் கொடி (3-775)

பொன் துன்னும் புணர்மென் கொங்கைப் பொலங் குழை (3-886)

பொன்துன்னும் மணிப் பூணாள் (5-320)

பொன் மதில் மிதிலை பூத்த தேமொழித் திரு (6-4307)

பொன்மயமான நங்கை (3-640)

பொன்வயின் மேனி கொண்டாள் [3-620]

பொன்னலதில்லைப் பொன்னை ஒப்பு எனப் பொறை யில் நின்றாள் [5-1271]

பொன்னிறத் திரு [2-794]

பொன்னைப் பொருகின்ற பொலன் குழையாள் [3-1099]

பொன்னைப்போல் ஒளிரும் மேனி மின்னைப் போல் இடையாள் [3-281]

போதினை வெறுத்து அரசர் பொன்மனை புகுந்தாள் (1-1228)

போது அரிக் கண்ணினாள் - தாமரை மலர் போன்ற செவ்வரி படர்ந்த கண்களை உடையவள் [5-479]

போது அரிக் கண் பொலங்குழைப் பூண்முலைச் சீதை [1-1163]

மதமா மருப்பு ஏந்திய எனல் ஆம்முலை,மழை ஏந்திய குழலாள் (2-627)

மதியின் பாகந்தரு நுதலாள் (2-625]

மயில் [1-600; 1102; 2-697; 746; 776; 777; 3-701];994; 4-525; 896; 5-510; 6-526; 4204; 4279]

மயில் அன்னவள் [1-604]

மயிலன்னாள் [1-1211; 3-792; 6-4059]

மயிலியல் - மயில்போன்ற அழகுடையவள் [3-1124]

மயிலியல் ; குயில் மழலையாள் [5-333]

மயிலியல் சீதை [5-1057]

மயிலியல் மடமான் [2-700]

மயிலுடைச் சாயலாள் [3-638]

மரு ஒன்று கூந்தலாள் [3-280]

மருங்கிலாள் [2-789]

மருங்கு அட வளர்ந்த முலை மங்கை - இடை ஒடியும் படி தழைத்தோங்கிய தனங்களை யுடையவள் [6-697]

மருங்கு இலா நங்கை [1-593]

மருந்தின் அனையாள் [4-26]

மருந்து அனைய தேவி [5-612]

மலர்க்கண் வந்தாள் – திருமகளின் அமிசமானவள் [6-4058]

மலர்க் குழலினாள் [6-64]

மலர்க் குழற் சீதை [1-765]

மலர்க் கூந்தல் சானகி [6-3878]

மின்னரசு - மின்னல்களுக்கரசு (1-580)
மின்னிடை(யாள்) (3-285)
மின்னிடைச் சனகி (4-210)
மின்னிடை மாதர் (4-628)
மின்னிற மருங்குலாள் (5-366)
மின்னின் நுண்ணிடைப் பொற்றொடி (3-945)
மின்னின் மின்னிய மேனியாள் (1-637)
மின்னே எனும் இடையாள் (1-1343)
மின்னை ஏய் இடை(யாள்) (3-40)
மின்னைக் கண்டனையாள் (4-623)
மின்னைப் போல் இடையாள் (3-281)
மீன் உலாம் நெடு மலர்க் கண்(ணி) (4-788)
மீன் என மிளிரும் கண்ணாள் (3-861)
மீன் நின்ற கண்ணினாள் (4-780)
முத்த நகையாள் (5-559)

முத்தினும் நிலவினும் முறுவல் முற்றினாள் - முத்து, நிலவை விட ஒளியில் மேம்பட்ட பற்களை உடையவள் (5-586)

முத்து இருத்திய, விருந்தனைய மொய்ந் நகை - முத்துக்களைப் பதிப்பித்த போலும், காண்போர்க்கு அக்காட்சியே ஒரு விருந்தளிப்பது போலும் விளங்கும் நெருங்கிய பற்களோடு கூடியவள் (3-2)

முல்லையுங் கடல் முத்தும் எதிர்ப்பினும் வெல்லும் வெண்ணகையாள் (2-527)

முலைக்கிரி சுமந்து இடைவதோர் மின்னிளங் கொடி
யின் வந்தாள் (4-786)
முளரி நீங்கிய தையல் (5-1266)
முளரி நீத்தாள் (6-2635)
மெல்லடி பஞ்சு அனையார் (4-488)
மெல்லிய இடையினுள் (6-4168)
மெல்லியல் (5-688; 3-374; 926; 5-688; 6-1221; 1584)
மெல்லோதியர் (1-1254)
மென் சொலாள் (5-381)
மென் தோளாள் (5-474)
மென் மருங்குல் (5-332)
மென் மலர்க் கொம்பு (1-604)
மேகத்தின் மின்னை முன்னே வென்ற நுண்ணிடை
யாள் (3-629)
மைக் கருங் குழலினுள் (3-289)
மைத்தகு விழிக் குறுநகைச் சனகன் மான் (4-515)
மைந்நின்ற வாட்கண் மயில் (3-701)
மையறு மலரின் நீங்கி வந்த செய்யவள் (1-556)
மொய்க்கருங் குழலினுள் - செறிவோடு கறுத்த
குழலினுள் (1-1290)
மொய்கொள் சீறடியைச் சேர்ந்த முளரிக்குஞ்
செம்மை ஈந்த தையலாள் (1-1202)
மொய்வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த
முந்நாள் மெய்வளர் மதியின் நாப்பண் மீனுண்
டேன் அனையதேய்ப்ப, வையக மடந்தைமார்க்
கும் நாகர் கோதையர்க்கும் வானத் தெய்வ
மங்கையர்க்கும் மேலாந் திலகம் (1-1209)

மொழிந்த சொல் அமிழ்தம் அன்னாள் (6-453)
யாம யாழ் மழலையாள் (4-753; யாம - நள்ளிரவில் ஓசை மிக்க)
யாழ் மழலையாள் (4-753)
யாழிசை மொழி (4-419)
வஞ்சி (2-167; 244; 671; 3-949; 950; 957; 958; 1015; 3-729; 4-961; 6-4; 419; 698; 2823)
வஞ்சியம் மருங்குல் அம் மறுவில் கற்பினாள் (5-594)
வஞ்சியன்ன மின்னிடை (3-285)
வஞ்சியிற் செவ்வியாள் – பெண்களுள் சிறந்த அழகுள்ளவள் (5-480)
வஞ்சியே போல்வாள் (3-276)
வட்டமுலைத் திரு (5-1241)
வடங்கொள் பூண்முலை மாமயில் (2-748)
வடித்தார் பூங்குழலாள் - வாரிவிட்டாற் போல் விளங்கும் அழகிய கூந்தலாள் (5-328)
வடுக்கண் வார் கூந்தலாள் (3-1004)
வடுவின் மாவகிர் இவையெனப் பொலிந்த கண் மயில் (2-776)
வண்டார் கோதை (4-959)
வண்டு உளர் கோதைச் சீதை (3-1035)
வண்டு உறை ஓதி (5-1267)
வண்ண வெண்ணகைத் தரள வாள் முகப் பெண் (4-878 ; வண்ண - அழகிய)
வம்பின் முலையாள் (5-605 ; வம்பு - கச்சு)

வாள் புரை விழியாள் [2-714]
வாள் முகப் பெண் [4-878]
வாள் விழிச் சனகி [2–573]
வாளும் வேலும் விட்டு அளாவின அனைய கண்
மயில் [2-746 ; அளாவின அனைய – சேர்த்து
ஒன்றாகக் கட்டியது போன்ற]
வான் உயர் கற்பினாள் [5-1276]
வான் கற்பிற்கு இணங்கர் இன்மையாள் [6-4038 ;
இணங்கர் - ஒப்பு]
வான் தேன் உகும் தகைமொழியாள் - சிறந்த
தேனைச் சிந்தும் தன்மை போன்ற பேச்சினை
உடையாள்
விடங்கொள் நோக்கி [2–752]
விடம் நுங்கிய கண் உடையார் [3-697 ; இராவணன்
கூற்று ; நுங்கிய - விழுங்கிய]
விரைக் கருங் குழலி [1-1144]
விரைக் குழல் சீதை [5–1060]
விரைக் குழல் - நறு மணமுள்ள கூந்தலினாள்
[4–262]
வில், கலை நுதலினார் [1–560 ; கலை - சந்திர கலை]
வில் கூடு நுதல் திரு [5–582 ; கூடு - ஒத்த]
வில்கொள் வாள் நுதல், விளங்கு இழை, இளந்
தளிர்க் கொழுந்து [2-763]
வில் தரு நுதல் மாது [2–709 ; தரு-ஒத்த]
வில்லி வாங்கிய சிலையெனப் பொலி நுதல் விளக்கு
[2–759 ; வில்லி வாங்கிய - வில்லில் வல்லவன்
வளைத்த]

வெளி யன்னதொர் இடையாள் (வெளி – ஆகாயம், வெற்றிடம் ; 2-623)

வெளிர்த்த மென் நகையவள் – வெண்ணிறமும் மென்மையுமான பற்களையுடையவள் [5–1170]

வெறிக் கருங் குழலி [5-1261]

வெறிக் கொள் பூங்குழலினுள் [வெறி-மணம், 3-423]

வென்று அம்மானைக் காய் அயில் வேலும் கொலை வாளும் பின்ற, மானப் பேர் கயல் அஞ்சப் பிறழ் கண்ணுள் [1–582 ; காய் அயில் - அழிக்கும் அம்பு; பின்ற – பின்னிட; பேர்–சஞ்சலமுடைய]

வேய் இடை தோளினுள் [3-284]

வேய் எனத் தகைய தோளி [6–1240]

வேய் வயின் மென் தோள் கொண்டாள் [3-620 ; வேய் வயின் - மூங்கிலினிடமிருந்து]

வேல் தடங் கண்ணுள் [6-2637]

வேல் தருங் கருங்கண் சீதை [3-721;தரும்-போன்ற]

வேல் நகு நெடுங்கண் செவ்வாய் மெல்லியல்[6-1221; வேல் நகு–கூரிய வேலையும் அவமதிக்கும்]

வேலைப் படையமை விழியாள் [6-405;வேலைப் படை– வேற்படை]

வேலைவாய் அமுதன்னுள் [2-670 ; வேலை – கடல்]

வேலை, வாளினை வென்ற கண்ணுள் [3–625]

வேற் கண் மயில் [6-4279]

வைதேவி [3-769]

வையக மடந்தை மார்க்கும் நாகர் கோதையர்க்கும் வானத் தெய்வ மங்கையர்க்கும் மேலாந் திலகம் [1–1209]

# ...சொல்லோவியம்...

அழகெல்லாம் ஒருருக்கொண்டது போன்ற பேரழகுடைய சீதையைச் சொல்லோவியமாக்கிக் கம்பர் காட்டுகின்றார். அந்த ஓவியத்தை நாம் 'உயிராவணமிருந்து உற்று நோக்கி உள்ளக் கிழியில் உருவெழுதிப்' பார்க்கும்போது எல்லையில்லாத அழகின்பத்தை, அழியா இன்ப உணர்வினை அடைகின்றோம். எல்லையில்லாத பரம்பொருள் வரம்பில் ஆற்றலுடைமையால் தன் அளப்பருஞ் சக்திகளை யெல்லாம் அடக்கிக் கொண்டு சிறியதோர் உருவில் அவதாரம் செய்வது போல அழகுத் தெய்வமான திருமகளின் அவதாரமாகிய சீதையும் அழகெல்லாம் திரண்ட பெண்ணாகக் காட்சி யளிக்கின்றாள். சீதை ஒரு பெண்தான்; ஆனால் தெய்வப் பெண். காலத்தால் மங்கிப் போகாது என்றும் குன்றாது நின்று பொலியும் தெய்வீகப் பேரழகு அவளிடம் குடிகொண்டிருக்கிறது. அழகே வடிவெடுத்தது போன்ற சீதையை - அழகினுக்கு அழகு செய்யும் சீதையை- நினைக்குந்தோறும் நாமும் இராமனைப் போலவே அமுது உண்ணுங் களிப்பினை அடைகின்றோம்.

## பேரெழிலாட்டி

ஓவியத்தால் எழுதிக் காட்டொணாத பேரழகு வாய்ந்தவள் சீதை. அவளுடைய திருமேனி மாந்தளிர் போன்றது; பூவினும் மென்மை வாய்ந்தது;

பொன்னிறமானது; அமிழ்தமயமானது; மின்னலைப் போல ஒளி வீசிக் கொண்டிருப்பது. பூங்கொடி போன்ற அவள் பொன்னால் செய்த அழகிய கொடி யாக ஒளிர்கின்றாள்.

எழுதரும் எழிலுடைய அவளது அழகுக்கு ஓர் எல்லையில்லை. அவள் அழகுக்கே அணிகலம் போன் றவள். அழகே வடிவெடுத்தவள். அழகு என் பதற்கே ஒரு புது அழகைச் செய்தவள். அழகு என்னும் பொன்னுக்கு மாற்று அறிவதற்காகப் பயன் படும் உரையாணிப் பொன்போல் இருக்கின்றாள். பிறர் எவருக்கும் இல்லாத சிவந்த அழகு அமைந்த வள். பொற்கொழுந்தென ஒளிவிடும் அப்பொலங் கொடி பெண்ணழகின் உச்சநிலையைப் பெற்றுள் ளாள். மற்ற பெண்களுடைய அழகின் தரத்தை ஒப் பிட்டு அறிவதற்கேற்ற கட்டளை யழகி (Standard - Beauty) யாக விளங்குகின்றாள். பெண்ணரசியா யும், மின்னரசியாயும் மிளிரும் அவள் அழகரசியாக வும் ஒளிர்கின்றாள்.

மற்ற மகளிர் அணிகலன் பூண்டு தம் அழகை மிகுதிப்படுத்திக் கொள்ள விழைவர். ஆனால் சீதை அணிகள் பூணாமலேயே அழகுடன் விளங்கும் தெய் வப் பெண்ணாக இருக்கின்றாள். அவளை அடையத் தவஞ்செய்யும் அணிகள்தாம் அவளுடைய அழகைப் பெற்றுப் பொலிவு பெறுகின்றனவேயன்றி அணி கலன்களால் அவளுக்குத் தனியொரு அழகுத் திறம் ஏற்படுவதில்லை.

# அழகுத் தெய்வம்

அழகுத் தெய்வமான சீதை ஓவியப் பாவை போன்றுள்ளாள். நினைத்தற்கும் அரிய அழகுத் திறங்களையும் பண்புகளையும் பெற்றுள்ளாள். அவளுடைய புற அழகுடன் அக அழகும் போட்டியிட்டுக் கொண்டிருக்கிறது. அழகிலும் பண்பிலும் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத அணங்கரசியாய் வீற்றிருக்கின்ருள். ஆடுகின்ற மாமயிலினும் அழகு படைத்தவளாய் உள்ளாள்.

சீதையை இலங்கைக்குச் சிறையெடுத்துச் சென்ற இராவணன் சீதையின் அழகில் தன் மனத்தை இழந்து தன் மானத்தையும் இழந்து அவள் காலடிகளில் வீழ்ந்து காதல் பிச்சை கேட்கிருன். இராவணனது அரண்மனையில் தேவலோகத்துப் பேரழகிகளான அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை ஆகியோர் சீதையைச் சுற்றி நிற்கின்றனர். உலகில் உள்ள அழகிய பெண்களின் அழகிலிருந்து எள்ளளவு எள்ளளவாகத் திரட்டி உருவாக்கப் பெற்ற பேரழகிதான் திலோத்தமை (திலம் என்ருல் எள்). ஆனல் திலோத்தமை முதலிய நால்வருடைய அழகும் சீதையென்னும் கதிரொளி முன்பு மின்மினியழகாயிற்று. சீதையின் முன்பு நிற்கும் போது வானுலக அழகிகளும் தங்கள் அழகை இழந்துவிடுகின்றனர்.

## எழுதரும் எழிலாள்

அழகுக்கே அழகு போன்ற சீதையின் திருவுருவை ஓவியங் கைவல்லாரும் உள்ளவாறு எழுதிக் காட்ட முடியாது. அத்தகைய வரம்பில்லாத பேரழகுடைய அவள் பெண்களில் திலகம் போன்றுள்ளாள். நந்தா விளக்குப் போல அழகொளி வீசிக்கொண்டிருக்கின்ருள்.

படைப்புக் கடவுளான பிரமன் அழகான பெண்களைப் படைப்பதற்கு மேல் வரிச் சட்டமாகச் சீதையின் அழகையே வைத்துக்கொண்டிருக்கிருன். பெண்கள் படைத் தலைவனுன மன்மதன் அமிழ்தம் கொண்டு தீட்டிய ஓவியம் போன்றுள்ளாள் சீதை. அந்த அனங்கவேளே சீதையின் அழகைப் போல ஓர் ஓவியம் தீட்ட எண்ணி அமுதில் கோல் தோய்த்துத் தீட்ட முற்படும்போது அவளுடைய அழகு நிறைந்த அவயவங்களைத் தீட்ட முடியாது திகைத்து நிற்கின்ருன்.

## ஓங்கிய எழிலாள்

ஓங்கிய அழகுடைய பிராட்டி இளம் பொற்கொம்பு போன்றவள்; இளந்தளிர்க் கொழுந்து அன்னவள்; ஒளி வீசும் தீபத்தை ஒத்தவள்; இளவஞ்சிக்கொடி அனையவள்; இனிய அமுது போன்றவள். வெண்சங்கு போன்று தூய்மையான அழகு வாய்ந்தவள். காண்டற்கு இனியவள். அச்சுந்தரி தேடுதற்

கரிய மாமணி போன்றவள். அழகின் பாரத்தை மிகு தியாய்ப் பெற்றுள்ள மயில் போன்றவள்; பொன் போன்றவள். தேன் போன்றவள். தூண்டா விளக் கனையவள்.

ஆடவர் பெண்மையை அவாவுந் தோளேயுடைய அழகன் இராமனின் தேவியான சீதையின் அழகை மாந்திய மிதிலே நகர மகளிர் எல்லாரும் தம் சொற் கள் குழறித் தடுமாறி நின்றனர் என்றுல் சீதையின் எழிலில் அரக்கன் இராவணன் மயக்கமுற்றதில் வியப்பேதும் இல்லே.

## சூர்ப்பணகையின் நற்சான்று

ஆரணியத்தில் சீதையைக் கண்ட சூர்ப்பணகை தாமரை மலரிலிருந்து நீங்கி அடியிணே படியில் தோயும்படி திருமகள் ஏன் இங்கு வருகின்ருள் என்று திகைத்து நின்ருள்! பின்பு அவளேயும் அவ ளருகில் நின்ற இராமனேயும் சிறிது நேரம் நோக்கி விட்டு 'மூன்றுலகிலும் ஆண் குலத்தில் சிறந்த பேரழகனுக இராமனேயும், பெண் குலத்தில் சிறந்த பேரழகியாகச் சீதையையும் கமலக் கடவுள் அழ குக்கு எல்லேயாகப் படைத்துவிட்டான்' என்று அவர் களுடைய அழகில் சொக்கி நின்ருள். பின்பு அண்ணன் இராவணனிடம் சீதையின் அழகைப் பற்றி வருணித்துக் கூறும்பொழுது "அவளேப் பார்த்த கண்கள் வேறு பிற பொருள்களேப் பார்க்க விரும்பமாட்டா. வைத்த கண் வாங்காமல் பார்க்க

வேண்டும் என்றே இருக்கும். பெண்ணுகப் பிறந்த எனக்கே இப்படி என்ருல் பிறரைப் பற்றி என்ன சொல்ல!'' என்று அக் காமவல்லியாங் கன்னி சீதையின் பேரழகுக்கு ஒரு நற்சான்றிதழ் வழங்கு கின்ருள்.

பண்புற நெடிது நோக்கிப்
  படைக்குநர் சிறுமை யல்லால்
எண் பிறங்கு அழகுக்கு எல்லே
  இல்லையாம் என்று நின்ருள்;
கண்பிற பொருளிற் செல்லா
  கருத்தெனின் அஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்ருல்
  என்படும் பிறருக் கென்ருள் (3-278)

மேலும் சூர்ப்பணகை சீதையின் அழகை அழகின் தெய்வமான திருமகளின் அழகோடு ஒப்பிட்டால் அந்தத் திருமகள் சீதைக்குச் சேடியாக இருக்கக் கூடத் தகுதியற்றவள் என்று ஒரேயடியாகத் திரு மகளின் அழகைக் குறைத்துச் சீதையின் அழகை உச்சாணிக்கு ஏற்றுகிருள்! 'தேவர்க்கும் அணங்கா மென்னத் தாமரை யிருந்த நங்கை சேடியாந் தரமு மல்லள்' (3-622) என்று பேசுகிருள். இதைவிட வேறு யார் சீதையின் அழகை மிகுத்துக் கூறிவிட முடியும்?

## கம்பரும் மயங்கினுர்

சீதையின் அழகைச் சொல்லோவியமாக்கி மனத் திரையில் கண்ட கவிஞர் கம்பரும் சீதையின்

பேரழகுக் கடலில் வீழ்ந்து திக்குமுக்காடியிருக்கிறுர். மிதிலே நகர மகளிர் எல்லாம் திருமண ஊர்வலத்தின் போது சீதையின் அழகைக் கண்டு களிமயக்குற்று நின்றனர். உலகில் பொதுவாகப் பெண்கள் அழகானவர்களாகக் கருதப்பட்டாலும் அவர்கள் ஒவ்வொரு உறுப்பில் அழகு நிறைந்தவர்களாகவே இருப்பார்கள். எல்லா உறுப்புகளிலும் குறைவிலா நிறைவு அவர்களிடம் காணப்படுவது அருமை. ஆனல் ஆணிப்பசும் பொன் அனேய சீதை எல்லா அவயவங்களிலும் அழகு நிறைந்தவளாகக் காணப்பட்டாள். மகளிரின் அழகெலாம் திரண்டு பரிபூரணமாக அவளிடம் குடிகொண்டிருந்தது. மிதிலே மகளிர் மயங்கியதைக் கண்ட கம்பரும் மயங்கினுர்! ‘அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்ற வல்லார்?’ (1-1213) என்று தம் ஆற்ருமையைத் தெரியப்படுத்திச் சமாளித்துக்கொள்ளப் பார்க்கிறுர்!

## பெண்கனி

பெண்ணருங்கலமான சீதை பொன்மயமானவள்; அமிழ்தமயமானவள். நல்ல வேலேப்பாடு முற்றுப் பெற்ற ஆபரணம் போன்ற அழகு வாய்ந்தவள். அழகின் புனேகலமாயுள்ளவள். ‘வையக மடந்தைமார்க்கும், நாகர் கோதையர்க்கும், வானத் தெய்வ மங்கையர்க்கும் மேலாந் திலகமாய்’ இலகுபவள். சிவந்த பொன்மயமான ஒரு பூங்கொம்பு இரண்டு வில்லேயும், இரண்டு கயல் மீன்களேயும் பெற்ற முழுநிலவைத் தாங்கிக் கொண்டு முல்லே

யரும்புகள் தன்னிடத்தே அரும்ப முளைத்து வந்தது போன்ற தோற்றத்தினள்.

இக்காலத்தில் அரசியல் தலைவர்களைப் பலவித கோணங்களில் படமெடுப்பவரைப் போலக் கம்பர் சீதையைப் பல நிலைகளில் (Poses) படமெடுத்துச் சொல்லில் வண்ணந் தீட்டிக் காட்டியுள்ளார். அவற்றுள் இன்னொரு சொல்லோவியம்; 'சீதை பேசு வன எல்லாம் இசை வகைகள்; உதடுகள் பவளம். பெண்களாய்ப் பிறந்தவர்க்கு இயற்கையாய் அமை யும் சிறந்த உறுப்புக்கள் எல்லாம் அமையுமாறு ஒன்றுகூட்டி அளவில்லாத குணங்களையும் பெற் றுள்ளவளே சீதையாம் பொற்கொடி' என்கிறார் கம்பர்.

பண்களால் கிளவி செய்து
பவளத்தால் அதர மாக்கிப்
பெண்களா ணார்க்குள் நல்ல
உறுப்பெலாம் பெருக்கி யீட்டி
எண்களால் அளவா மானக்
குணந் தொகுத்து இயற்றினள் (6-1571)

இனிச் சீதையின் ஒவ்வொரு அவயவத்தின் அழகையும் தனித்தனிச் சொல்லோவியங்களில் கவிஞர் காட்டியிருப்பதைக் காணலாம்.

## திருமுகம்

சீதையின் ஒளிபொருந்திய முகம் மறுவற்ற திங்களைப் போன்றது. அந்த முகத்தின் அழகைக்

கண்டு தாமரை தனக்கு அந்த அழகு இல்லையே என்று வெட்கம் அடைகிறது. கூந்தல் போன்ற கருநிறம் வாய்ந்த வண்டுகள் சூழ்ந்த தாமரை மலர் போன்றது சானகியின் ஒளி முகம். கோபித் தாலும் அழகு குன்ருது விளங்கும் அந்த வாள் முகத்திற்குத் தான் ஒப்பாக முடியவில்லையே என்று அவமானமுற்ற திங்களின் முகம் சுண்டியிருப்பது தான் அதன் கண் காணப்படும் களங்கமாகும். அத ஞல் தான் 'மாமதி தனக்கு மாமறுத் தந்த முகத் தினள்' (6-3928) என்று குறிப்பிடப்பெறுகிருள். அவளுடைய திங்கள் மண்டிலத்தில் இளம் பிறை (நெற்றி), ஆம்பல் (வாய்), வில் (புருவம்), வள்ளை (காது), கெண்டை மீன் (கண்), தரளம் (பல்) முதலி யவை நட்புறவுடன் வாழ்கின்றன.

## பூங்குழல்

சீதையின் கூந்தல் மலரணியப் பெற்று நீண்டு, சுருண்டு, கறுத்து, அடர்த்தியாக, அழகாக வளர்ந்து காணப்படுகிறது. கத்தூரி, புழுகு, புதுப்பூ, மணம் வீசும் அகில், தேன் இவைகளைப் பெற்று அவ ளுடைய மெல்லிடை இற்றுப் போகுமளவுக்குப் பாரம் ஏற்றிக்கொண்டிருக்கிறது. அக் கூந்தலில் 'பொம்' மென்று வண்டுகள் எப்போதும் விருப்பத்து டன் ரீங்காரம் செய்துகொண்டே இருக்கின்றன. மலரிதழ்கள் மணம் வீசிக கொண்டிருக்கின்றன. இதழ்களைச் சேர்த்துக் கட்டிய பூமாலை பூங்குழலை

அலங்கரித்துக் கொண்டிருக்கிறது. கார்மேகம் போலவும், கரும்பாம்பு போலவும், இருளைப் போலவும் இருண்டு செறிவாகக் காணப்படும் அக் கூந்தல் வெவ்வேறு வகையாகப் பின்னப்பட்டிருக்கிறது. பொன்னலான தகட்டணி கூந்தலில் அணியப் பெற்றுள்ளது. மலரின் மணத்துக்கேயன்றிக் கூந்தலில் வீசப்பெறும் நறுமணத்திற்காகவும் வண்டுகள் அக்கூந்தலில் குடிகொண்டிருக்கின்றன. கூந்தல் ஆற்று வண்டலைப் போலவும், கொன்றைக் காய்கள் நெருங்கியிருப்பதைப் போலவும் விளங்கு கின்றது. குரா மலரின் மணம் வீசும் அக்கூந்தலில் கள் (தேன்) இருக்கும். மென்மை வாய்ந்த தண்ணிய அக் கூந்தல் 'மேகத்தை வெட்டிக் கட்டித் தேனையும் அகில் புகையையும் ஏற்றி அடர்ந்த இருட் பிழம்பிலே தோய்த்துப் படிப்படியாக நெறித்தலைச் செய்து ஒளிரும் கற்றையாகிய குழல்' என்று வருணிக்கப் பட்டுள்ளது.

காரினைக் கழித்துக் கட்டிக்
கள்ளினோடு ஆவி காட்டிப்
பேரிருட் பிழம்பு தோய்த்து
நெறி உறீஇப் பிறங்கு கற்றைச்
சோர் குழல் தொகுதி என்று
சும்மை செய் தனையது அம்மா !
நேர்மையைப் பருமை செய்த
நிறை நறுங் கூந்தல் நீத்தம் (4-778)

## நுதல்

சீதையின் ஒளிமிக்க திரு நுதல் வில்லையும் பிறையையும் போன்றது. பிராட்டியின் நுதலைப் போன்ற அழகைப் போல் தனக்கில்லையே என்று வளர்பிறை வருந்துகின்றது.

## புருவங்கள்

தேவியின் அழகான, வளைந்த புருவங்களுக்கு மன்மதனின் வில்லை உவமையாகக் கூறலாம். ஆனால் அந்த அனங்கவேளின் வில்லில் சரியொத்து வளைந்து நிற்கும் இரண்டு பகுதிகள் இல்லையே!

## கண்கள்

பிராட்டியின் கண்கள் பெருந்தடங் கண்கள், கருந்தடங்கண்கள், பிணைநெடுங்கண்கள் என்று வருணிக்கப் பெறுகின்றன. விழிகள் வேல் போன்றவை. சாதாரண வேல்களைப் போன்றவை அல்ல அவை. நெய் பூசப் பெற்றுக் குருதி படிந்து, நெருப்பில் காய்ச்சப் பெற்று நீண்டு மைநிறைந்த கூரிய வேல்களைப் போன்றவை. மிளிரும் அந்த வேற் கண்களைக் கண்டால் காலனுங் கலக்கங்கொள்வான். அவ்விழிகள் காதுகளில் உள்ள ஒளி வீசும் குண்டலம் வரை நீண்டிருக்கின்றன.

பூப்போன்ற, செவ்வரி படர்ந்த கண்கள் மானின் கண்களைப் போன்றுள்ளன. நீல மலரைப்

போன்ற அக் கண்களில் நஞ்சமும் இருக்கும் அமுதமும் இருக்கும். ஆனால் வஞ்சமுங் களவும் இருக்கமாட்டா. அவை சேல் மீன்களைப் போலப் பிறழ்ச்சி பெற்றவை. உள்ளங்கையளவு அகன்றவை.

காதுவரை நீண்டுள்ள தேவியின் நீலோற்பல விழிகள் வேலினை நகுகின்றன. வேலினையும் வாளி னையும் வென்றுள்ளன. கொல்லுங் கூற்றத்தினை யும் வெல்லும் வல்லமை வாய்ந்தவையாய் மதர்த்துக் காணப்படுகின்றன. பாம்பணை மீது (கருவிழி) அறி துயில் கொண்டிருக்கும் பரமன் (கண்ணின் பாவை) வாழும் பாற்கடல் (கண்ணின் வெள் விழி) போல மிளிர்கின்றன அக்கண்கள்.

மாவடுப் போன்ற அக்கண்களில் மை தீட்டப் பெற்றுள்ளது. மீன் என மிளிரும் அக் கண்கள் மழைக் கண்களாக (குளிர்ச்சி பொருந்தியனவாக) வும் உள்ளன. சுடர் முகத்து உலவுகின்ற வாள் போன்ற அக் கருங்கண்கள் கடலினும் பெரியவை.

## காது

வள்ளை மலர், கத்தரிகை, மயிர்வினைக் கருவி என்று காதுகளுக்கு வழக்கமாகக் கூறும் உவமை கள் சீதையின் காதுகளுக்கு ஏற்புடைத்தாகா. வெள்ளி வெண்தோடு செய்த விழுத்தவப் பயனே காதுகளாக வடிவம் பெற்றன என்று கூறுதலே பொருந்தும்.

## வாய்

கொவ்வைப் பழத்தின் அழகு அமைந்த சீதை யின் வண்ணவாய் பவளம் போலவும் சிந்தூரம் போலவும் சிவந்து காணப்படுகிறது. ஆம்பல் மலரைப் போன்ற அழகைப் பெற்றுள்ளது. பெண் களின் வாயினுக்கு உவமையாகக் கூறப் பெறும் பவளம், சிவந்த நெட்டி, கொவ்வைப் பழம், குமுதம், இலவம், இந்திர கோபம், முருக்கு முதலிய சிவப்பு நிறப் பொருள்கள் சீதையின் வாயோடு ஒப்பிடப் பெறும்போது மிகவும் வெண்மையாகக் காணப்படும் என்றால் சீதையின் வாய்ச் சிறப்பை வருணித்து உரைக்க முடியுமோ ?

## அதரங்கள்

இலவம் பழமும் இந்திர கோபமும் போலச் சிவந்த சீதையின் அதரங்களுக்கு அமுதத்தை உவமையாகக் கூறலாம். ஆனால் அமுதம் சிவப்பு நிறம் பெற்றிருக்கவில்லை. அதில் தேனும் இல்லை. அதில் தேனிருக்கிறது என்று யாரேனும் கூறினா லும் அத்தேனைப் பருகும்போது தான் இன்பம் பிறக்குமே ஒழிய ‘உள்ளக் களித்தலும் காண மகிழ் தலும்’ உண்டாவதில்லை. சீதையின் தேனிதழ்களை நினைத்தபோதே இராமனது வாயில் தேன் ஊறும் !

## நகை (பல்)

தேவியின் பற்கள் வெண்மையானவை; மென் மையானவை; அழகானவை. முத்தைப் போல்

ஒளி வீசுபவை. முத்துக்களைப் பதித்து வைத்தது போன்று காட்சியளிக்கும் அவை காண்பார்க்குப் புதுமையின்பத்தை நல்கிக் கொண்டிருக்கின்றன. முல்லையரும்புகளும் கடல் முத்தும் ஒன்றுகூடி எதிர்த்தாலும் பிராட்டியின் வெண்பற்களை (அழகிலும் ஒளியிலும்) வென்றுவிட முடியாது. அப்பற்கள் முத்தைக் காட்டிலும் நிலவைக்காட்டிலும் ஒளியில் மேம்பட்டவை; மயிலிறகின் அடியைப் போல் கூரியவை.

## சொல்

தேவியின் திருவாய் மலரிலிருந்து பிறக்கும் குளிர்ந்த சொற்கள் தேன் போன்றவை. மழலைச் சொற்களாகப் பிறக்கும் அவை கேட்போர்க்குக் குழலினும் யாழினும் இன்பம் பயக்கும். பால் போன்ற அச்சொற்கள் தேன் பாகுபோல இனிக்கும்; பண்களைப் போலச் சுவை தரும்.

வீணையையும் அமிழ்தத்தையும் கரும்பையும் குயிலின் குரலையும் வென்ற சொற்களைப் பேசும் பிராட்டி குதலைச் சொல்லுடைய குழந்தைகளும், யாழும், விளரிப் பண்களும், நைவளப் பண்ணும், நாகணவாய்ப் புள்ளும் மருளுமாறு நாளும் மழலை மொழிகளை வழங்குவாள். தேனுடன் அமுது அளாவிய மென் சொற்கள் செவிக்கு இன்பம் பயக்கும். தமிழ் மொழியினும், யாழினும், புல்லாங்குழலினும் இனிமை தரும் சொற்களைப் பேசும் பிராட்டியைக் கம்பர், "குயிலுங் கரும்புஞ் செழுந்தேனும்

குழலும் யாழுங் கொழும் பாகும் அயிரும் (கற்கண்டும்) அமுதுஞ்சுவை தீர்த்த மொழி'யாள் (3-1058) என்று குறிப்பிடுகின்ருர்.

குயில் போலக் கிளிபோல இன்னிசை போலத் தேன் சொட்டச் சொட்டப் பேசும் சீதை கிளிகளுக் கெல்லாம் இன்சொற்களைக் கற்பிப்பாள். அமுதில் அள்ளிக் கொண்டது போன்ற சீதையின் சொல்லுக்கு உவமையாகக் கூறப்பெறும் தேனும் அமிழ்தமும் காதினிலே வந்து பாய்ந்தால் அவை இன்சொற்களைப் போலச் செவிக்கு இன்பஞ் செய்ய வல்லவையல்ல.

## தோள், கை

சீதையின் மென்தோள்கள் மூங்கில் போன்றவை. வளையல் அணிந்த மெல்லிய தாமரைக் கைகள் தளிர் போன்றவை காந்தள் மலரைப் போன்ற வடிவமும் நிறமும் பெற்றவை.

விரல்கள் பவழம் போன்றவை.

## நகில்

சீதையின் கச்சணிந்த, அழகிய, குவிந்த மார்பகங்களில் அணிகலன்கள் விளங்குகின்றன. பருத்த, நெருக்கமான, வட்டமான, மென்மை வாய்ந்த மார்புகளில் பொன்னிறமான அழகுத் தேமல் உள்ளது; பல வண்ணங்களில் வரிகளமைந்த தொய்யில் எழுதப் பெற்றுள்ளது; கோல

மாக வரைந்த குங்குமக் குழம்பையும் பெற்றுள்ளது. யானைக்கொம்பு, சூதாடும் வட்டுக்காய், மலை, குலிகச் செப்பு, பொற்கலசம், கோங்கு, தாமரையின் அரும்பு குமிழ், செவ்விளநீர், சக்கர வாகம் முதலியவற்றிற்கு உவமையாகத் தக்க சிறப்புடைய அக்கொங்கைகள் திரட்சிமிக்குப் பூரித்துப் புடைகொண்டு எழுந்து கச்சுக்குள் அடங்காமலிருக்கின்றன. அவை நுடங் கிடை ஒடியும்படி தழைத்தோங்கியுள்ளன. இடைக்கு இடைவிடாது இடையூறு விளைக்கும் அந்தக் கொங் கைகளை வருணிக்க அந்நங்கையின் தலைவனான இராமனுக்கன்றி வேறு யாருக்கு உரிமை உள்ளது? சீதையின் அங்க அடையாளங்களை அனுமனுக்குச் சொல்லியனுப்பும் இராமன் தன் துணைவியின் சித்திர வனமுலையை இவ்வாறு சித்திரிக்கின்றான்.

செப்பு என்பென்; கலசம் என்பென்;
செவ்விள நீரும் தீர்வென்
துப்பு ஒன்று திரள் சூது என்பென்;
சொல்லுவென் தும்பிக் கொம்பைத்;
தப்பு இன்றிப் பகலின் வந்த
சக்கர வாகம் என்பென்;
ஒப்பு ஒன்றும் உலகில் காணேன்;
பல நினைந்து உலைவென் இன்னும்
(4-762)

## இடை

சீதையின் நொவ்விடை நுட்பமானது; நூல் போல நுண்ணியது; மெலிந்தது; பொன்னாலான துடி போன்றது; வஞ்சிக் கொடி போன்றது; மேகத் தின் மின்னலைப் போலத் திடீரென்று தோன்றி மறைவது.

# இந்நூலாசிரியரின் பிற நூல்கள்

| | |
|---|---|
| அடுக்கு மொழி அகராதி | (மறுபதிப்பு அச்சில்) |
| எதிர்ப்பத அகராதி | விலை ரூ. 3—00 |
| ஒலிக் குறிப்பகராதி | 1—75 |
| விநாயகர் அருட் செல்வம் | 5—00 |
| விநாயகர் அருட் பெருமை | 1—20 |
| விநாயகரின் ஆயிரந் திருநாமங்கள் | 1—30 |
| திருமகள் அருட் செல்வம் | 2—25 |
| கலைமகள் அருட் செல்வம் | 1—00 |
| இராமன் அருட் செல்வம் | 3—50 |
| ஐம்பொறி யகராதி | (அச்சில்) |



கிடைக்குமிடம் :-

பாரி நிலையம்,

59, பிராட்வே, சென்னை-1.

வெற்றிவேல் பிரஸ், 155, சத்தி ரோடு, ஈரோடு.